உ

சிவமயம்

பாலறாவாயர் துணை

# எண்ணிய எண்ணியாங்கு ஈயும் திருமுறைத் திரட்டு

'சைவ சித்தாந்த சரபம்'

## சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள்

தேவக்கோட்டை









வெளியீடு:

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் தமிழகச் சைவநெறிக் கழகம்

18வது சிவபூசை மாநாடு

4.1.97. மார்கழிச் சுவாதி





உ

சிவமயம்

பாலறாவாயர் துணை

# எண்ணிய எண்ணியாங்கு ஈயும் திருமுறைத் திரட்டு

'சைவ சித்தாந்த சரபம்'

## சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள்

தேவக்கோட்டை




*வெளியீடு:*

**சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் தமிழகச் சைவநெறிக் கழகம்**

18வது சிவபூசை மாநாடு

4.1.97. மார்கழிச் சுவாதி

உ

சிவமயம்

# பதிப்புரை

நம் சைவ ஆசாரியர்களாகிய திருஞானசம்பந்தர் பெருமான் முதல் சேக்கிழார் பெருமான் வரை 27 அருளாளர்கள் நாம் வாழ பன்னிரு திருமுறைகள் அருளிச் செய்தார்கள். திருமுறைப் பாடல்க்ள் மந்திரங்கள் போல ஓதுபவர்களுக்கு உதவி செய்வன. அப்பாடல்களில் சிலவற்றை அவை வழங்கும் பயன்களைக் காட்டி இதில் வெளியிட்டுள்ளோம். இவ்வெளியீட்டிற்கும் விழாவில் வெளியிடப்படும் 'சகலகலா வல்லி மாலை' வெளியீட்டிற்கும் தமது பெற்றோர்கள் ராமசாமி செட்டியார் - மீனாட்சியம்மாள் நினைவாக பொருளுதவி புரிந்தும் இன்னும் மாநாட்டுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தும் ஈடுபடுகின்ற திரு. **S.K.R.** ஈஸ்வரன் செட்டியார் அவர்களுக்கும் அவர்களது துணைவியார் லெட்சுமி அம்மாளுக்கும் சோழீசுவரப் பெருமான் திருவருளால் எல்லா வளங்களும் நிறைவதாக. அன்பர்கள் ஓதிப் பயன் பெறுவார்களாக.

*இப்படிக்கு*

**சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் தமிழகச் சைவநெறிக் கழகத்தினர்.**

*அலுவலகம்:*

47, அக்ரஹாரம், வரகனேரி,
திருச்சி - 8.

*கிளை:*

17. தெற்குவீதி, மலைக்கோட்டை,
திருச்சி - 2.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# எண்ணிய எண்ணியாங்கு ஈயும் திருமுறைத் திரட்டு

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய தேவாரம்

## முதற்றிருமுறை

## குருவருளைக் கொடுப்பது

திருப்பிரமபுரம் பண்: நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

1

தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதி சூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசி என் உள்ளங்கவர் கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்த அருள் செய்த
பீடுடையபிர மாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே. 1

2

முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவை பூண்டு
வற்றலோடுகல ஞப்பலிதேர்ந்தென துள்ளங்கவர் கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையால்தொழு தேத்தப்
பெற்றம்ஊர்ந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே. 2

3

நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதி சூடி
ஏர்பரந்தஇன வெள்வளைசோரஎன் உள்ளங்கவர் கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய ஓருரிது வென்னப்
பேர்பரந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே. 3

4

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலை யோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர் கள்வன்
மண்மகிழ்ந்தஅர வம்மலர்க்கொன்றை மலிந்தவரை மார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே. 4

5

ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை யூரும்இவ னென்ன
அருமையாகவுரை செய்யஅமர்ந்தென துள்ளங்கவர் கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்இது வென்னப்
பெருமைபெற்றபிர மாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே. 5

6

மறைகலந்தஒலி பாடலோடாடல ராகிமழு வேந்தி
இறைகலந்தஇன வெள்வளைசோரஎன் உள்ளங்கவர் கள்வன்
கறைகலந்தகடி யார்பொழில்நீடுயர் சோலைக்கதிர் சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே. 6

7

சடைமுயங்குபுன லன் அனலன்எரி வீசிச்சதிர் வெய்த
உடைமுயங்கும்அர வோடுழிதந்தென துள்ளங்கவர் கள்வன்
கடல்முயங்குகழி சூழ்குளிர்கானல்அம் பொன்னஞ்சிற கன்னம்
பெடைமுய'ங்குபிர மாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே. 7

8

வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளை வித்த
உயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர் கள்வன்
துயரிலங்கும்உல கிற்பலஊழிகள் தோன்றும்பொழு தெல்லாம்
பெயரிலங்கு பிரமாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே. 8

9

தாணுதல் செய்திறை காணியமாலொடு தண்டாமரை யானும்
நீணுதல் செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர் கள்வன்
வாணுதல் செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்
பேணுதல் செய்பிர மாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே. 9

10

புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறி நில்லா
ஒத்தசொல்லஉல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர் கள்வன்
மத்தயானைமறுகவ்வரி போர்த்ததோர் மாயம்இது வென்னப்
பித்தர்போலும்பிர மாபுரம்மேவிய பெம்மானிவ னன்றே. 10

11

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர் மேய
பெருநெறியபிர மாபுரம்மேவிய பெம்மானிவன் றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்உரை செய்த
திருநெறியதமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல்எளி தாமே. 11

திருச்சிற்றம்பலம்

## இம்மை நலங்களை வழங்குவது

திருச்சிவபுரம் பண்: நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

1

புவம்வளி கனல்புனல் புவிகலை யுரைமறை திரிகுணம் அமர்நெறி
திவமலி தருசுரர் முதலியர் திகழ்தரும் உயிரவை யவைதம
பவமலி தொழிலது நினைவொடு பதுமநன் மலரது மருவிய
சிவனது சிவபுரம் நினைபவர் செழுநில னில்நிலை பெறுவரே. 12

11

திகழ்சிவ புரநகர் மருவிய சிவனடியிணைபணி சிரபுர
நகரிறை தமிழ்விர கனதுரை நலமலியொருபதும் நவில்பவர்
நிகழ்குல நிலநிறை திருவுரு நிகரிலகொடைமிகு சயமகள்
புகழ்புவி வளர்வழி யடிமையின் மிகைபுணர்தர நலம் மிகுவரே. 13

திருச்சிற்றம்பலம்

4

## வினை நீக்கம் செய்வது

திருவண்ணாமலை பண் : நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

1

உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ணம் அறுமே. 14

11

வெம்புந்திய கதிரோன்ஒளி விலகும்விரி சாரல்
அம்புந்திமூ வெயிலெய்தவன் அண்ணாமலை யதனைக்
கொம்புந்துவ குயிலாலுவ குளிர் காழியுள் ஞான
சம்பந்தன தமிழ்வல்லவர் அடிபேணுதல் தவமே. 15

திருச்சிற்றம்பலம்

## இடர் களைவது

நெடுங்களம் பண் : பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

1

மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப்பே சினல்லால்
குறையுடையாய் குற்றம்ஓராய் கொள்கையினால் உயர்ந்த
நிறையுடையார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 16

2

கனைத்தெழுந்த வெண்டிரைசூழ் கடலிடைநஞ் சுதன்னைத்
தினைத்தனையா மிடற்றில்வைத்த திருந்தியதே வநின்னை
மனத்தகத்தோர் பாடல் ஆடல் பேணியிராப் பகலும்
நினைத்தெழுவார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 17

3

நின்னடியே வழிபடுவான் நிமலாநினேக் கருத
என்னடியான் உயிரைவவ்வேல் என்றடற்கூற் றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடுநீர் சுமக்கும்
நின்னடியார் இடர்களேயாய் நெடுங்களம்மே யவனே. 18

4

மலேபுரிந்த மன்னவன்றன் மகளேயோர்பால் மகிழ்ந்தாய்
அலேபுரிந்த கங்கைதங்கும் அவிர்சடையா ரூரா
தலேபுரிந்த பலிமகிழ்வாய் தலைவநின்றாள் நிழற்கீழ்
நிலேபுரிந்தார் இடர்களேயாய் நெடுங்களம்மே யவனே. 19

5

பாங்கினல்லார் படிமஞ்செய்வார் பாரிடமும் பலிசேர்
தூங்கிநல்லார் பாடலோடு தொழுகழலே வணங்கித்
தாங்கிநில்லா அன்பிஞேடுந் தலேவநின்தாள் நிழற்கீழ்
நீங்கிநில்லார் இடர்களேயாய் நெடுங்களம்மே யவனே. 20

6

விருத்தஞகிப் பாலஞகி வேதமோர்நான் குணர்ந்து
கருத்தஞகிக் கங்கையாளேக் கமழ்சடைமேற் கரந்தாய்
அருத்தஞய ஆதிதேவன் அடியிணேயே பரவும்
நிருத்தர்கீதர் இடர்களேயாய் நெடுங்களம்மே யவனே. 21

7

கூறுகொண்டாய் மூன்றுமொன்றாக் கூட்டியோர்வெங் கணேயால்
மாறுகொண்டார் புரமெரித்த மன்னவனே கொடிமேல்
ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெருமா னணிந்த
நீறுகொண்டார் இடர்களேயாய் நெடுங்களம்மே யவனே. 22

8

குன்றின்உச்சி மேல்விளங்குங் கொடிமதில்சூழ் இலங்கை
அன்றிநின்ற அரக்கர்கோனை யருவரைக்கீழ் அடர்த்தாய்
என்றுநல்ல வாய்மொழியா லேத்தியிராப் பகலும்
நின்றுநைவார் இடர்களேயாய் நெடுங்களம்மே யவனே. 23

9

வேழவெண்கொம் பொசித்தமாலும் விளங்கியநான் முகனும்
சூழவெங்கும் தேடஆங்கோர் சோதியுளா கிநின்றாய்
கேழல்வெண்கொம் பணிந்தபெம்மான் கேடிலாப்பொன்னடியின்
நீழல்வாழ்வார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 24

10

வெஞ்சொல்தஞ்சொல் லாக்கிநின்ற வேடமிலாச் சமணும்
தஞ்சமில்லாச் சாக்கியருந் தத்துவமொன் றறியார்
துஞ்சலில்லா வாய்மொழியால் தோத்திரநின் னடியே
நெஞ்சில்வைப்பார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 25

11

நீடவல்ல வார்சடையான் மேயநெடுங் களத்தைச்
சேடர்வாழும் மாமறுகிற் சிரபுரக்கோன் நலத்தால்
நாடவல்ல பனுவன்மாலை ஞானசம் பந்தன்சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார் பாவம் பறையுமே. 26

திருச்சிற்றம்பலம்

## வினையையும் வெப்பு நோயையும் நீக்குவது

பொது பண்: வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

1

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம். 27

2

காவினை யிட்டுங் குளம்பல தொட்டும் கூனி மனத்தால்
ஏவினை யால்எயில் மூன்றெரித் தீரென் றிருபொழுதும்
பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாமடியோம்
தீவினை வந்தெமைத் தீண்டப்பெறாதிரு நீலகண்டம். 28

3

மூலத்தடம் மூழ்கிய போகங்களும்மற் றெவையும் எல்லாம்
விலைத்தலை யாவணம் கொண்டெமை யாண்டவிரிசடையீர்
இலைத்தலைச் சூலமும் தண்டும் மழுவும் இவையுடையீர்
சிலைத்தெமைத் தீவினை தீண்டபெறா திருநீலகண்டம். 29

4

விண்ணுல காள்கின்ற விச்சா தரர்களும் வேதியரும்
புண்ணிய ரென்றிரு போதுந் தொழப்படும் புண்ணியரே
கண்ணிமை யாதன மூன்றுடையீருங் கழலடைந்தோம்
திண்ணிய தீவினை தீண்டப்பெறாதிரு நீலகண்டம். 30

5

மற்றிணை யில்லா மலைத்திரண்டன்னதிண் டோளுடையீர்
கிற்றெமை யாட்கொண்டு கேளாதொழிவதுந் தன்மைகொல்லோ
சொற்றுணை வாழ்க்கை துறந்துந் திருவடியே யடைந்தோம்
செற்றெமைத் தீவினை தீண்டப் பெறாதிரு நீலகண்டம். 31

6-7

மறக்கு மனத்தினை மாற்றியெம் ஆவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் திருந்தடிக் கீழ்ப்பிழை யாதவண்ணம்
பறித்த மலர்கொடு வந்துமையேத்தும் பணியடியோம்
சிறப்பிலித் தீவினை தீண்டப்பெறாதிரு நீலகண்டம். 32

8

கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்துங் கழலடிக்கே
உருகி மலர்கொடு வந்துமை யேத்தும் நாமடியோம்
செருவிருல் அரக்கனைச் சீரிலடர்த்தருள் செய்தவரே
திருவிலித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 33

9

நாற்ற மலர்மிசை நான்முகன் நாரணன் வாதுசெய்து
தோற்ற முடைய அடியும் முடியுந் தொடர்வரியீர்
தோற்றினுந் தோற்றுந் தொழுது வணங்குவதும் நாமடியோம்
சீற்றம தாம்வினை தீண்டப்பெறாதிரு நீலகண்டம். 34

10

சாக்கியப் பட்டுஞ் சமணுரு வாகி யுடையொழிந்தும்
பாக்கிய மின்றி யிருதலைப் போகமும் பற்றும் விட்டார்
பூக்கமழ் கொன்றைப் புரிசடை யீரடி போற்றுகின்றோம்
தீக்குழித் தீவினை தீண்டப்பெறாதிரு நீலகண்டம். 35

11

பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்
இறந்த பிறவியுண்டாகில் இமையவர் கோன் அடிக்கண்
திறம்பயில் ஞானசம் பந்தன செந்தமிழ் பத்தும் வல்லார்
நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே. 36

திருச்சிற்றம்பலம்

## மழையை வருவித்து உணவுப்பஞ்சத்தை நீக்குவது

திருக்கச்சியேகம்பம் பண்: மேகராகக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

1

வெந்தவெண் பொடிப்பூசு மார்பின் விரி நூலொருபால் பொருந்தக்
கந்தமல்கு குழலியோடுங் கடிபொழிற் கச்சிதன்னுள்
அந்தமில் குணத்தா ரவர்போற்ற அணங்கினொடு ஆடல்புரி
எந்தை மேவிய வேகம்பந் தொழுதேத்த இடர்கெடுமே. 37

11

ஏரினுர் பொழில்சூழ்ந்த கச்சியேகம்ப மேயவனைக்
காரினுர் மணிமாட மோங்கு கழுமல நன்னகருள்
பாரினார் தமிழ்ஞான சம்பந்தன் பரவிய பத்தும்வல்லார்
நீரினார் புகழோங்கி விண்ணவ ரோடுஞ் சேர்பவரே. 38

திருச்சிற்றம்பலம்

9

## செல்வத்தை வழங்குவது

திருவீழிமிழலை பண்: குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

1. வாசிதீரவே, காசு நல்குவீர்
மாசின் மிழலையீர், ஏசலில்லையே 39

2. இறைவ ராயினீர், மறைகொண் மிழலையீர்
கறைகொள் காசினை, முறைமை நல்குமே 40

3. செய்ய மேனியீர், மெய்கொண் மிழலையீர்
பைகொ ளரவினீர், உய்ய நல்குமே 41

4. நீறு பூசினீர், ஏற தேறினீர்
கூறு மிழலையீர், பேறு மருளுமே 42

5. காமன் வேவவோர், தூமக் கண்ணினீர்
நாம மிழலையீர், சேம நல்குமே 43

6. பிணிகொள் சடையினீர், மணிகொண் மிடறினீர்
அணிகொண் மிழலையீர், பணிகொண் டருளுமே 44

7. மங்கை பங்கினீர், துங்க மிழலையீர்
கங்கை முடியினீர், சங்கை தவிர்மினே 45

8. அரங்க னெரிதர, இரக்க மெய்தினீர்
பரக்கு மிழலையீர், கரக்கை தவிர்மினே 46

9. அயனு மாலுமாய், முயலு முடியினீர்
இயலு மிழலையீர், பயனு மருளுமே 47

10. பறிகொ டலையினார், அறிவ தறிகிலார்
வெறிகொண் மிழலையீர், பிறிவ தரியதே 48

11. காழி மாநகர், வாழி சம்பந்தன்
வீழி மிழலைமேல், தாழு மொழிகளே 49

திருச்சிற்றம்பலம்

10

## கோள்களால் வரும் துன்பத்தை நீக்குவது

திருக்கோளிலி பண்: பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

1

நாளாய போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாய வன்புசெய்வோ மடநெஞ்சே யரனாமம்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறமருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே 50

திருச்சிற்றம்பலம்

## இரண்டாந்திருமுறை

## மகப்பேற்றை வழங்குவது

திருவெண்காடு பண்: சீகாமரம்

1

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டு முருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங் கொடியானே 51

2

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குள நீர்
தோய்வினையா ரவர் தம்மைத் தோயாவாந் தீவினையே 52

11

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் றமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண்பிறைச்சென்னி விகிர்தனுறைவெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர் போய் வான் பொலியப் புகுவாரே 53

திருச்சிற்றம்பலம்

## 11

# உலகியலில் வரும் துன்பங்கள் அனைத்தையும் நீக்குவது

பொது பண்: பியந்தைக் காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

1. வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிக நல்லவீணைதடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனிபாம்பிரண்டுமுடனே
ஆசறு நல்லநல்ல் வவைநல்ல நல்ல
வடியாரவர்க்குமிகவே 54

2. என்பொடுகொம்பொடாமை யிவைமார்பிலங்க
எருதேறியேழையுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடிவந்தெ
னுளமே புகுந்தவதனால்
ஒன்பதொடொன்றொடேழு பதினெட்டாறு
முடனாயநாள்க ளவைதாம்
அன்பொடு நல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே 55

3. உருவளர்பவளமேனி யொளிநீறணிந்து
வுமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கள் முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
திருமகள் கலையதூர்தி செயமாதுபூமி
திசை தெய்வமானபலவும்
அருநெதி நல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே 56

4. மதிநுதன் மங்கையோடு வடபாலிருந்து
மறையோது மெங்கள்பரமன்
நதியோடு கொன்றைமாலை முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
கொதியுறுகாலனங்கி நமனோடுதூதர்
கொடுநோய்களான பலவும்
அதிகுண நல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே 57

5. நஞ்சணிகண்டனெந்தை மடவாடனோடும்
விடையேறு நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
வெஞ்சினவவுணரோடு முருமிடியுமின்னு
மிகையான பூதமவையும்
அஞ்சிடு நல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே 58

6. வாள்வரியதளநடை வரிகோவணத்தர்
மடவாடனோடுமுடனாய்
நாண்மலர் வன்னிகொன்றை நதிசூடிவந்தெ
னுளமே புகுந்தவதனால்
கோளரியுழுவையோடு கொலையானைகேழல்
கொடு நாகமோடு கரடி
ஆளரி நல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே 59

7. செப்பிளமுலைநன்மங்கை யொருபாகமாக
விடையேறு செல்வனடைவார்
ஒப்பிளமதியுமப்பு முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
வெப்பொடு குளிரும் வாத மிகையான பித்தும்
வினையான வந்து நலியா
அப்படிநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே 60

8. வேள்படவிழிசெய்தன்று விடைமேலிருந்து
மடவாடனோடுமுடனாய்
வாண்மதி வன்னிகொன்றை மலர்சூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனால்
ஏழ்கடல்சூழிலங்கை யரையன்றனோடு
மிடரான வந்துநலியா
ஆழ்கடனல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே 61

9. பலபலவேடமாகும் பரனாரிபாகன்
பசுவேறுமெங்கள் பரமன்
சலமகளோடெருக்கு முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
மலர்மிசையோனுமாலு மறையோடுதேவர்
வருகாலமான பலவும்
அலைகடல்மேருநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே 62

10. கொத்தலர்குழலியோடு விசையற்குநல்கு
குணமாயவேடவிகிர்தன்
மத்தமுமதியுநாக முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்
புத்தரொடமணைவாதி லழிவிக்குமண்ண
றிருநீறு செம்மை திடமே
அத்தகுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே 63

11. தேனமர் பொழில்கொளாலை விளைசெந்நெறுன்னி
வளர் செம்பொனெங்கு நிகழ
நான்முகனாதியாய பிரமாபுரத்து
மறைஞான ஞானமுனிவன்
தானுறு கோளுநாளு அடியாரை வந்து
நலியாத வண்ணமுரைசெய்
ஆனசொல்மாலையோது மடியார்கள்வானி
லரசாள்வராணை நமதே. 64

திருச்சிற்றம்பலம்

14

## மணமங்கலத்தை வழங்குவது

திருமருகல் பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

1

சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையார் தகுமோ விவளுண் மெலிவே 65

11

வயஞா னம்வல்லார் மருகற் பெருமான்
உயர்ஞா னமுணர்ந் தடியுள் குதலால்
இயன்ஞா னசம்பந் தனபா டல்வல்லார்
வியன்ஞா லமெல்லாம் விளங்கும் புகழே 66

திருச்சிற்றம்பலம்

## வருத்தங்களைத் தீர்ப்பது

வலஞ்சுழி பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே
யிருங்கடல் வையத்து
முன்ன நீபுரி நல்வினைப் பயனிடை
முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி
வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும் பாடியும்
வழிபடு மதனாலே 67

11. மாதொர் கூறனை வலஞ்சுழி மருவிய
மருந்தினை வயற்காழி
நாதன் வேதியன் ஞானசம் பந்தன்வாய்
நவிற்றிய தமிழ்மாலை
ஆதரித்திசை கற்றுவல் லார்சொலக்
கேட்டுகந் தவர்தம்மை
வாதி யாவினை மறுமைக்கு மிம்மைக்கும்
வருத்தம்வந் தடையாவே. 68

திருச்சிற்றம்பலம்

## வெப்பு நோயைப் போக்குவது

திருவாலவாய் பண்: காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

1 மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்திர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் றிருவால வாயான்றிருநீறே 69

2 வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு வுண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருவால வாயான் றிருநீறே 70

3 முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ வினியது நீறு
சித்தி தருவது நீறு திருவால வாயான் றிருநீறே 71

4 காண வினியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருவால வாயான் றிருநீறே 72

5 பூச வினியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச வினியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு வந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருவால வாயான் றிருநீறே 73

6 அருத்தம தாவது நீறு வவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வான மளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசம் வெண்ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருவால வாயான் றிருநீறே 74

7 எயிலது வட்டது நீறு விருமைக்கு முள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தாலவா யான்றிரு நீறே 75

8 இராவணன் மேலது நீறு வெண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவமாவது நீறு
அராவணங் குந்திரு மேனி யாலவா யான்றிரு நீறே 76

9 மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்க டங்கண் மெய்யது வெண்பொடி நீறு
ஏல வுடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் மாலவா யான்றிரு நீறே 77

10 குண்டிகைக் கையர்களோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்டிகைப் பிப்பது நீறு கருத வினியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளா ரேத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்து மாலவா யான்றிரு நீறே 78

11 ஆற்ற லடல்விடை யேறு மாலவா யான்றிரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னனுட லுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே 79

திருச்சிற்றம்பலம்

## மன இளைப்பைத் தீர்ப்பது

திருசசாய்க்காடு பண்: சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

1 மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்
விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெந் தலைவன்றாள் சார்ந்தாரே 80

திருச்சிற்றம்பலம்

## செல்வத்தை வழங்குவது

திருக்கோட்டூர் பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

1 பாடியாடுமெய்ப் பத்தர்கட் கருள்செயும்
முத்தினைப் பவழத்தைத்
தேடிமாலயன் காணவொண் ணாதவத்
திரிவினைத் தெரிவைமார்
கூடியாடவர் கைதொழு கோட்டூர்நற்
கொழுந்தேயென் றெழுவார்கள்
நீடுசெல்வத்த ராகியிவ் வுலகினில்
நிகழ்தரு புகழாரே 81

திருச்சிற்றம்பலம்

## மூன்றாம் திருமுறை

## பொருளை வழங்குவது

திருவாவடுதுறை பண்: காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

1 இடரினுந் தளரினு மெனதுறுநோய்
தொடரினு முனகழ றொழுதெழுவேன்




கடறணி லமுதொடு கலந்தநஞ்சை
மிடறினி லடக்கிய வேதியனே
இதுவோவெமை யாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோவுன தின்னரு ளாவடு துறையரனே! 82

11 அலைபுன லாவடு துறையமர்ந்த
இலைநுனை வேற்படை யெம்மிறையை
நலமிகு ஞானசம் பந்தன் சொன்ன
விலையுடை யருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயின நீங்கிப்போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் னேறுவர் நிலமிசை நிலையிலரே 83

திருச்சிற்றம்பலம்

## அருந்துயரை அகற்றுவது

திருநெல்வேலி பண்: சாதாரி

1

மருந்தவை மந்திர மறுமை நன் னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன் சொரிதரத் துன்றுபைம்பூஞ்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வேலியுறை செல்வர்தாமே 84

திருச்சிற்றம்பலம்

## பஞ்சாக்கரத் திருப்பதிகம்

பொது பண்: காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

1 துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமி னாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைத்தன வஞ்செ ழுத்துமே 85

2 மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையு ணின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுண் மந்திர மஞ்செ ழுத்துமே 86

3 ஊனிலு யிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞானவி ளக்கினை யேற்றி நண்புலத்
தேனைவ ழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆனகெ டுப்பன வஞ்செ ழுத்துமே 87

4 நல்லவர் தீயரெ னாது நச்சினர்
செல்லல்கெ டச்சிவ முத்தி காட்டுவ
கொல்லந மன்றமர் கொண்டு போமிடத்
தல்லல்கெ டுப்பன வஞ்செ ழுத்துமே 88

5 கொங்கலர் வன்மதன் வாளி யைந்தகத்
தங்குள பூதமு மஞ்ச வைம்பொழில்
தங்கர வின்பட மஞ்சுந் தம்முடை
அங்கையி லைவிர லஞ்செ ழுத்துமே 89

6 தும்ம லிரும றொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை யஞ்செ ழுத்துமே 90

7 வீடுபி றப்பை யறுத்து மெச்சினர்
பீடைகெ டுப்பன பின்னை நாடொறும்
மாடுகொ டுப்பன மன்னு மாநடம்
ஆடியு கப்பன வஞ்செ ழுத்துமே 91

8 வண்டம ரோதி மடந்தை பேணின
பண்டையி ராவணன் பாடி யுய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்
கண்டம ளிப்பன வஞ்செ ழுத்துமே 92

9 கார்வணை னான்முகன் காணு தற்கொணாச்
சீர்வணச் சேவடி செவ்வி நாடொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்
கார்வண மாவன வஞ்செ ழுத்துமே 93

10 புத்தர்ச மண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்க டெளிந்து தேறின
வித்தக நீரணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன வஞ்செ ழுத்துமே 94

11 நற்றமிழ் ஞானசம் பந்த னான்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய
அற்றமின் மாலையீ ரைந்து மஞ்செழுத்
துற்றன வல்லவ ரும்ப ராவரே 95

திருச்சிற்றம்பலம்

## நமச்சிவாயத் திருப்பதிகம்

பொது பண்: கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

1 காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்த்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே 96

2 நம்பு வாரவர் நாவி னவிற்றினால்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ னார்தில கம்முல குக்கெலாம்
நம்ப னாம நமச்சி வாயவே 97

3 நெக்கு ளார்வு மிகப்பெரு கிந்நினைந்
தக்கு மாலைகொ டங்கையி லெண்ணுவார்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்க னாம நமச்சி வாயவே 98

4 இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்
நியமந் தானினை வார்க்கினி யானெற்றி
நயன னாம நமச்சி வாயவே 99

5 கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்
நல்லார் நாம நமச்சி வாயவே 100

6 மந்த ரம்மன பாவங்கண் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்
நந்தி நாம நமச்சி வாயவே 101

7 நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயி னுருத்திர
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரத னாம நமச்சி வாயவே 102

8 இலங்கை மன்ன னெடுத்த வடுக்கன்மேல்
தலங்கொள் கால்விரல் சங்கர னூன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவ னுய்வகை
நலங்கொ ணாம நமச்சி வாயவே 103

9 போதன் போதன கண்ணனு மண்ணறன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி யலந்தவர்
ஓது நாம நமச்சி வாயவே 104

10 கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்
வெஞ்சொன் மிண்டர் விரவில ரென்பரால்
விஞ்சை யண்டர்கள் வேண்ட வமுதுசெய்
நஞ்சுண் கண்ட னமச்சி வாயவே 105

11 நந்தி நாம நமச்சி வாயவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்தபாச மறுக்கவல் லார்களே. 106

திருச்சிற்றம்பலம்

## குறைவில்லாத நல்வாழ்வை நல்குவது

திருக்கழுமலம் பண்: கொல்லி

திருச்சிற்றம்பலம்

1 மண்ணினல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல் லகதிக்கி யாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே 107

2 போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே 108

11 கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தவெம் பிரான்றனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே 109

திருச்சிற்றம்பலம்

## சுளுக்கு வறுமை முதலியவற்றை ஒழிப்பது

பொது பண்: கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

1 வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே 110

2 அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரிய ரேறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ரார‌றி வாரவர் பெற்றியே 111

3 வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலோ 112

4 ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதி மாண்பும்
கேட்பான் புகிலள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்கத் தக்கார் 113

5 ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள் சோதி
மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கண் மிக்கீ ரிறையே வந்து சார்மின்களே 114

6 ஆடும் மெனவும் மருங்கூற்ற முதைத்து வேதம்
பாடும் மெனவும் புகழல்லது பாவ நீங்கக்
கேடும் பிறப்பும் மறுக்கும் மெனக்கேட்டீராகில்
நாடுந் திறத்தார்க்கு கருளல்லது நாட்ட லாமே. 115

7 கடிசேர்ந்த போது மலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதை பண்டு
முடி சேர்ந்த காலையற வெட்டிட முக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ணம் மறிவார் சொல்லக்கேட்டுமன்றே. 116

8 வேத முதல்வன் முதலாக விளங்கி வையம்
ஏதப் படாமை யுலகத்தவ ரேத்தல் செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாப் பொலிந்த
சூத னொலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே. 117

9 பாராழி வட்டம் பகையா னலிந்தாட்ட வாடிப்
பேராழி யான திடர்கண் டருள்செய்தல் பேணி
நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்ட வர்க்குப்
போராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே. 118

10 மாலா யவனும் மறைவல்ல நான்முகனும்
பாலாய தேவர் பகரில்லமு தூட்டல் பேணிக்
காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதா யெழுந்த
ஆலால முண்டங் கமரர்க் கருள்செய்த தாமே. 119

11 அற்றன்றி யந்தண் மதுரைத் தொகையாக்கி னானும்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர்வி னூரவும் பண்பு நோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே 120

12 நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்த னல்ல
எல்லார் களும்பரவு மீசனை யேத்து பாடல்
பல்லார் களும்மதிக்கப் பாசுரஞ் சொன்ன பத்தும்
வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்ல ரன்றே 121

திருச்சிற்றம்பலம்

## தீவினைகளைத் தீர்ப்பது

திருமாகறல் பண்: சாதாரி

திருச்சிற்றம்பலம்

1

விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள் பாடல்விளை யாடலரவம்
மங்குலொடு நீள்கொடிகள் மாமலி நீடுபொழில் மாகறலுளான்
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர் திங்களணி செஞ்சடையினான்
செங்கண்விடை யண்ணலடி சேர்பவர்கள் தீவினைகள் தீருமுடனே 122

திருச்சிற்றம்பலம்

## தவநெறியைத் தருவது

திருப்புகலி பண்: காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

3 பாடினை யருமுறை வரன் முறையால்
ஆடினை கரணமுன் னருவனத்திற்
சாடினை காலனைத் தயங்கொளிசேர்
நீடுவெண் பிறைமுடி நின்மலனே
நினையேயடி யார்தொழ நெடுமதிற் புகலிந்நகர்
தனையேயிட மேவினை தவநெறி அருளெமக்கே 123

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய தேவாரம்

## நான்காம் திருமுறை

## குருவருளைத் கொடுப்பது

திரு அதிகை வீரட்டானம் பண்: கொல்லி

திருச்சிற்றம்பலம்

1 கூற்றாயின வாறு விலக்ககிலீர் கொடுமைபல
செய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேயிர வும்பகலும் பிரியாது
வணங்குவ னெப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றி னகம்படியே குடரோடு
துடக்கி முடக்கியிட
ஆற்றேனடி யேனதி கைக்கெடில வீரட்டா
னத்துறை யம்மானே 124

2 நெஞ்சம் உமக்கேயிட மாகவைத்தேன் நினையாதொரு
போதும் இருந்தறியேன்
வஞ்சம் இது வொப்பது கண்டறியேன் வயிற்றோடு
துடக்கி முடக்கியிட

நஞ்சாகி வந்தென்னை நலிவதனை நணுகாமற்
றுரந்து கரந்துமிடீர்
அஞ்சேலு மென்னீ ரதிகைக்கெடில வீரட்டா
னத்துறை யம்மானே 125

3 பணிந்தாரன பாவங்கள் பாற்றவல்லீர் படுவெண்டலை
யிற்பலி கொண்டுழல்வீர்
துணிந்தேயுமக் காட்செய்து வாழலுற்றாற் சுடுகின்றது
சூலை தவிர்த்தருளீர்
பிணிந்தார்பொடி கொண்டுமெய் பூசவல்லீர் பெற்றமேற்
றுகந்தீர் சுற்றும் வெண்டலை கொண்
டணிந்தீரடி கேளதி கைக்கெடில வீரட்டா
னத்துறை யம்மானே 126

4 முன்னம்அடி யேனறி யாமையினாள் முனிந்தென்னை
நலிந்து முடக்கியிடப்
பின்னையடி யேனுமக் காளும்பட்டேன் சுடுகின்றது
சூலை தவிர்த்தருளீர்
தன்னையடைந் தார்வினை தீர்ப்பதன்றோ தலையாயவர்
தங்கட னாவதுதான்
அன்னநடை யாரதி கைக்கெடில வீரட்டா
னத்துறை யம்மானே 127

5 காத்தாள்பவர் காவ லிகழ்ந்தமையாற் கரைநின்றவர்
கண்டுகொ ளென்றுசொல்லி
நீத்தாய கயம்புக நூக்கியிட நிலைக்கொள்ளும்
வழித்துறை யொன்றறியேன்
வார்த்தையிது வொப்பது கேட்டறியேன் வயிற்றோடு
துடக்கி முடக்கியிட
ஆர்த்தார்புன லாரதி கைக்கெடில வீரட்டா
னத்துறை யம்மானே 128

6 சலம்பூவொடு தூபம் மறந்தறியேன் தமிழோடிசை
பாடல் மறந்தறியேன்
நலந்தீங்கிலு முன்னை மறந்தறியேன் உன்னாமம்
என்னாவில் மறந்தறியேன்

உலந்தார்தலை யிற்பலி கொண்டுழல்வாய் உடலுள்ளுறு
சூலை தவிர்த்தருளாய்
அலந்தேனடி யேனதி கைக்கெடில வீரட்டா
னத்துறை யம்மானே 129

7 உயர்ந்தேன்மனை வாழ்க்கையு மொண்பொருளும் ஒருவர்தலை
காவ லிலாமையினால்
வயந்தேயுமக் காட்செய்து வாழலுற்றால் வலிக்கின்றது
சூலை தவிர்த்தருளீர்
பயந்தேயென் வயிற்றி னகம்படியே பறித்துப்
புரட்டியறுத் தீர்த்திடநான்
அயர்ந்தேனடி யேனதி கைக்கெடில வீரட்டா
னத்துறை யம்மானே 130

8 வலித்தேன்மனை வாழ்க்கை மகிழ்ந்தடியேன் வஞ்சம்மன
மொன்று மிலாமையினால்
சலித்தாலொரு வர்துணை யாருமில்லைச் சங்கவெண்குழைக்
குழைக் காதுடை யெம்பெருமான்
கலித்தேயென் வயிற்றி னகம்படியே கலக்கிமலக்
கிட்டுக் கவர்ந்துதின்ன
அலுத்தேனடி யேனதி கைக்கெடில வீரட்டா
னத்துறை யம்மானே 131

9 பொன்போல மிளிர்வதொர் மேனியினீர் புரிபுன்சடை
யீர்மெலி யும்பிறையீர்
துன்பேகவ லைபிணி யென்றிவற்றை நணுகாமற்
றுரந்து கரந்துமிடீர்
என்போலிக ளும்மை யினித்தெளியார் அடியார்படு
வதிது வேயாகில்
அன்பேயமை யும்மதி கைக்கெடில வீரட்டா
னத்துறை யம்மானே 132

10 போர்த்தாயங்கொ ரானையின் ஈருரிதோல் புறங்காடரங்
காநட மாடவல்லாய்
ஆர்த்தானரக் கன்றனை மால்வரைக்கீழ் அடர்த்திட்டருள்
செய்த வதுகருதாய்

வேர்த்தும் புரண்டும் விழுந்தும் மெழுந்தால்
என்வேதனையானவிலக்கிடாய்
ஆர்த்தார்புனல் சூழதி கைக்கெடில வீரட்டா
னத்துறை யம்மானே 133

திருச்சிற்றம்பலம்

## அச்சத்தை அகற்றுவது

திரு அதிகை வீரட்டானம் பண்: காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

1 சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளா மணியும்
வண்ண உரிவை யுடையும் வளரும் பவள நிறமும்
அண்ண லரண்முர ணேறும் அகலம் வளாய அரவும்
திண்ணன் கெடிலப் புனலும் உடையாரெருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை 134

2 பூண்டதொர் கேழல் எயிறும் பொன்திக ழாமை புரள
நீண்டதிண்டோள்வலஞ் சூழ்ந்து நிலாக்கதிர் போலவெண் ணூலும்
காண்டகு புள்ளின் சிறகுங் கலந்தகட் டங்கக் கொடியும்
ஈண்டு கெடிலப் புனலும் உடையாரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை 135

3 ஒத்த வடத்திள நாக முருத்திர பட்ட மிரண்டும்
முத்து வடக்கண் டிகையும் முளைத்தெழு மூவிலை வேலு
சித்த வடமும் அதிகைச் சேணுயர் வீரட்டஞ் சூழ்ந்து
தத்துங் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை 136

4 மடமான் மறிபொற் கலையும் மழுப்பாம் பொருகையில் வீணை
குடமால் வரையதிண் டோளுங் குனிசிலைக் கூத்தின் பயில்வும்

இடமால் தழுவிய பாகம் இருநில னேற்ற சுவடும்
தடமார் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர் நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை 137

5 பலபல காமத்த ராகிப் பதைத்தெழு வார்மனத் துள்ளே
கலமலக் கிட்டுத் திரியுங் கணபதி யென்னுங் களிறும்
வலமேந் திரண்டு சுடரும் வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை 138

6 கரந்தன கொள்ளி விளக்குங் கறங்கு துடியின் முழக்கும்
பரந்த பதினெண் கணமும் பயின்றறி யாதன பாட்டும்
அரங்கிடை நூலறிவாளர் அறியப் படாததொர் கூத்தும்
நிரந்த கெடிலப் புனலும் உடையார் ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை 139

7 கொலைவரி வேங்கை யதளுங் குலவோ டிலங்கு பொற்றோடும்
விலைபெறு சங்கக் குழையும் விலையில் கபாலக் கலனும்
மலைமகள் கைக்கொண்ட மார்பும் மணியார்ந் திலங்குமிடறும்
உலவு கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர் நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை 140

8 ஆடல் புரிந்த நிலையும் அரையில் அசைத்த அரவும்
பாடல் பயின்றபல் பூதம் பல்லா யிரங்கொள் கருவி
நாடற் கரியதொர் கூத்தும் நன்குயர் வீரட்டஞ் சூழ்ந்து
ஓடுங் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை 141

9 சூழும் அரவத் துகிலுந் துகில்கிழி கோவணக் கீளும்
யாழின் மொழியவள் அஞ்ச அஞ்சா தருவரை போன்ற




வேழம் உரித்த நிலையும் விரிபொழில் வீரட்டஞ் சூழ்ந்து
தாழுங் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை 142

10 நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல் லாங்கொண் டெடுத்தான் ஒன்பதும் ஒன்றும் அலற
லரங்கள் கொடுத்தருள் செய்வான் வளர்பொழில் வீரட்டஞ் சூழ்ந்து
நிரம்பு கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை
அஞ்ச வருவது மில்லை 143

திருச்சிற்றம்பலம்

## நமச்சிவாயத் திருப்பதிகம்

பொது பண்: காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

1 சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே 144

2 பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரன் அஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலம் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே 145

3 விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. 146

4 இடுக்கண்பட் டிருக்கினும் இரந்தி யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளின் நாம்உற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே 147

5 வெந்த நீ றருங்கலம் விரதி கட்கெலாம்
அந்தணர்க் கருங்கலம் அருமறை ஆறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கலம் நமச்சி வாயவே 148

6 சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்கு வான்நலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே 149

7 வீடினுர் உலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினுர் அந்நெறி கூடிச் சென்றலும்
ஓடினேன் ஓடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினேன் நாடிற்று நமச்சி வாயவே 150

8 இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே 151

9 முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசரணுதல் திண்ணமே
அந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே 152

10 மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே 153

திருச்சிற்றம்பலம்

32

## விடத்தைத் தீர்ப்பது

பொது பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

1. ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவர் ஊர்வது தானே 154

2. இரண்டுகொ லாமிமை யோர்தொழு பாதம்
இரண்டுகொ லாமிலங் குங்குழை பெண்ணுண்
இரண்டுகொ லாமுரு வஞ்சிறு மான்மழு
இரண்டுகொ லாமவ ரெய்தின தாமே 155

3. மூன்றுகொ லாமவர் கண்ணுத லாவன
மூன்றுகொ லாமவர் சூலத்தின் மொய்யிலை
மூன்றுகொ லாங்கணை கையது வில்நாண்
மூன்றுகொ லாம்புரம் எய்தன தாமே 156

4. நாலுகொ லாமவர் தம்முக மாவன
நாலுகொ லாஞ்சன னம்முதற் றோற்றமும்
நாலுகொ லாமவ ரூர்தியின் பாதங்கள்
நாலுகொ லாமறை பாடின தாமே 157

5. அஞ்சுகொ லாமவ ராடர வின்படம்
அஞ்சுகொ லாமவர் வெல்புல னுவன
அஞ்சுகொ லாமவர் காயப்பட் டான்கணை
அஞ்சுகொ லாமவ ராடின தாமே 158

6. ஆறுகொ லாமவ ரங்கம் படைத்தன
ஆறுகொ லாமவர் தம்மக னூர்முகம்
ஆறுகொ லாமவர் தார்மிசை வண்டின்கால்
ஆறுகொ லாஞ்சுவை யாக்கின தாமே 159

7. ஏழுகொ லாமவ ரூழி படைத்தன
ஏழுகொ லாமவர் கண்ட விருங்கடல்
ஏழுகொ லாமவராளு முலகங்கள்
ஏழுகொ லாம்இசை யாக்கின தாமே 160

8. எட்டுக்கொ லாமவ ரீறில் பெருங்குணம்
எட்டுக்கொ லாமவர் சூடு மினமலர்
எட்டுக்கொ லாமவர் தோளிணை யாவன
எட்டுக்கொ லாந்திசை யாக்கின தாமே 161

9. ஒன்பது போலவர் வாசல் வகுத்தன
ஒன்பது போலவர் மார்பினில் நூலிழை
ஒன்பது போலவர் கோலக் குழற்சடை
ஒன்பது போலவர் பாரிடந் தானே 162

10. பத்துக்கொ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கொ லாமெயி றுந்நெரிந் துக்கன
பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்தலை
பத்துக்கொ லாமடி யார் செய்கை தானே 163

திருச்சிற்றம்பலம்

## திருவருளை எளிதில் கூட்டுவது

திருக்கடவூர் திருநேரிசை

திருச்சிற்றம்பலம்

4. பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்த ராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை யுள்ளேவைத்து
விரும்பிநல் விளக்குத்தூபம் விதியினுல் இடவல் லார்க்குக்
கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர்வீ ரட்ட ஞரே 164

திருச்சிற்றம்பலம்

## பெருஞ்செல்வம் ஆக்குவது

திருவையாறு திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

7. களித்துக் கலந்ததொர் காதற் கசிவொடு காவிரிவாய்க்
குளித்துத் தொழுதுமுன் நின்றஇப் பத்தரைக் கோதில்செந்தேன்
தெளித்துச் சுவையமுதூட்டி யமரர்கள் சூழிருப்ப
அளித்துப் பெருஞ்செல்வ மாக்கும்ஐ யாறன் அடித்தலமே 165

திருச்சிற்றம்பலம்

## சிவகதியை வழங்குவது

திருப்பாதிரிப்புலியூர் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

6. கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன் உனதருளால்
திருவாய் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூர்அரனே 166

திருச்சிற்றம்பலம்

## சிவசிந்தனையை நிலைக்கச் செய்வது

திருப்பாதிரிப்புலியூர் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும்இவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கியிருந்தருள் செய்பா திரிப்புலியூர்ச் செழுநீர்ப்
புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த தீவண்ணனே. 167

திருச்சிற்றம்பலம்

## திருமகளை நிலைபெறச் செய்வது

திருநாகைக்காரோணம் திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

5. செந்துவர் வாய்க்கருங் கண்ணிணை வெண்ணகைத் தேன்மொழியார்
வந்து வலஞ்செய்து மாநடம் ஆட மலிந்தசெல்வக்
கந்த மலிபொழில் சூழ்கடல் நாகைக்கா ரோணமென்றும்
சிந்தைசெய் வாரைப் பிரியா திருக்குத் திருமங்கையே 168

திருச்சிற்றம்பலம்

## கண் நோயை நீக்குவது

திருமாற்பேறு திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

2. கருடத் தனிப்பாகன் காண்டற் கரியன காதல்செய்யில்
குருடர்க்கு முன்னே குடிகொண்டிருப்பன கோலமல்கு
செருடக் கடிமலர்ச் செல்விதன் செங்கம லக்கரத்தால்
வருடச் சிவப்பன மாற்பே றுடையான் மலரடியே 169

திருச்சிற்றம்பலம்

## வினைப் பகையை விலக்குவது

திருநல்லம் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

6. அல்ல லாகஐம் பூதங்களாட்டினும்
வல்ல வாறு சிவாய நமவென்று
நல்லம் மேவிய நாத னடிதொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே 170

திருச்சிற்றம்பலம்

# ஐந்தாம் திருமுறை

## உய்தியை வழங்குவது

திருமாற்பேறு திருக்குறுத்தொகை

திருச்சிற்றம்பலம்

7. ஐய னேஅர னேயென் றரற்றினால்
உய்ய லாம்உல கத்தவர் பேணுவர்
செய்ய பாதம் இரண்டும் நினையவே
வையம் ஆளவும் வைப்பர்மாற் பேறரே 171

திருச்சிற்றம்பலம்

## மனக்கோணலை ஒழிப்பது

திருமருகல் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

1. பெருக லாந்தவம் பேதைமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருத்தலாம்
பருக லாம்பர மாயதோ ரானந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே 172

திருச்சிற்றம்பலம்

## எமவேதனையைத் தடுப்பது

பொது காலபாசத் திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

1. கண்டு கொள்ளரி யானைக் கனிவித்துப்
பண்டு நான்செய்த பாழிமை கேட்டிரேல்
கொண்ட பாணி கொடுகொட்டி தாளங்கைக்
கொண்ட தொண்டரைத் துன்னிலுஞ் சூழலே 173

2. நடுக்கத் துள்ளும் நகையுளும் நம்பர்க்குக்
கடுக்கக் கல்ல வடமிடு வார்கட்குக்
கொடுக்கக் கொள்க எனவுரைப் பார்களை
இடுக்கண் செய்யப் பெறீரிங்கு நீங்குமே 174

3. கார்கொள் கொன்றைக் கடிமலர்க் கண்ணியார்
சீர்கொள் நாமஞ் சிவனென் றரற்றுவார்
ஆர்க ளாகிலு மாக அவர்களை
நீர்கள் சாரப் பெறீரிங்கு நீங்குமே 175

4. சாற்றி னேன்சடை நீண்முடிச் சங்கரன்
சீற்றங் காமன்கண் வைத்தவன் சேவடி
ஆற்ற வுங்களிப் பட்ட மனத்தராய்ப்
போற்றி யென்றுரைப் பார்புடை போகலே 176

5. இறையென் சொல்மற வேல்நமன் தூதுவீர்
பிறையும் பாம்பு முடைப்பெரு மான்தமர்
நறவம் நாறிய நல்நறுஞ் சாந்திலும்
நிறைய நீறணி வாரெதிர் செல்லலே 177

6. வாம தேவன் வளநகர் வைகலும்
காம மொன்றில ராய்க்கை விளக்கொடு
தாமம் தூபமும் தண்நறுஞ் சாந்தமும்
ஏம மும்புனை வாரெதிர் செல்லலே 178

7. படையும் பாசமும் பற்றிய கையினீர்
அடையன் மின்நம தீசன் அடியரை
விடைகொ ளூர்தியி னான்அடி யார்குழாம்
புடைபு காதுநீர் போற்றியே போமினே 179

8. விச்சை யாவதும் வேட்கைமை யாவதும்
நிச்சல் நீறணி வாரை நினைப்பதே
அச்ச மெய்தி அருகணை யாதுநீர்
பிச்சை புக்கவன் அன்பரைப் பேணுமே 180

9. இன்னங் கேண்மின் இளம்பிறை சூடிய
மன்னன் பாதம் மனத்துட னேத்துவார்
மன்னும் அஞ்செழுத் தாகிய மந்திரம்
தன்னிலொன்றுவல் லாரையுஞ் சாரலே 181

10. மற்றுங் கேண்மின் மனப்பரிப் பொன்றின்றிச்
சுற்றும் பூசிய நீற்றொடு கோவணம்
ஒற்றை யேறுடை யானடி யேஅலால்
பற்றொன் றில்லிகள் மேற்படை போகலே 182

11. அரக்கன் ஈரைத் தலையுமோர் தாளினல்
நெருக்கி யூன்றியிட்டான்தமர் நிற்கிலும்
சுருக்கெனுதங்குப் பேர்மின்கண் மற்றுநீர்
சுருக்கெ னிற்சுட ரான்கழல் சூடுமே 183

திருச்சிற்றம்பலம்

## பாவம் பழிகளை ஒழிப்பது

பொது திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

1. பாவ மும்பழி பற்றற வேண்டுவீர்
ஆவில் அஞ்சுகந் தாடு மவன்கழல்
மேவராய் மிக வும்மகிழ்ந் துள்குமின்
காவ லாளன் கலந்தருள் செய்யுமே 184

திருச்சிற்றம்பலம்

## ஆறாந்திருமுறை

## கருச்சிதைவைத் தடுப்பது

திருக்கருகாவூர் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

1. குருகாம் வயிரமாங் கூறு நாளாங் கொள்ளுங்
கிழமையாங் கோளே தானும்

பருகா அமுதமாம் பாலின் நெய்யாம்
பழத்தின் இரதமாம் பாட்டிற் பண்ணும்
ஒருகா லுமையாளோர் பாக னுமாம்
உள்நின்ற நாவிற் குரையா டியாம்
கருவா யுலகுக்கு முன்னே தோன்றுங்
கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே. 185
திருச்சிற்றம்பலம்

## மூலநோயைத் தீர்ப்பது

திருமறைக்காடு திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

9. மூலநோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்
முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்
ஆலின்கீழ் நால்வர்க் கறத்தான் கண்டாய்
ஆதியு மந்தமு மானான் கண்டாய்
பால விருத்தனு மானான் கண்டாய்
பவளத் தடவரையே போல்வான் கண்டாய்
மாலைசேர் கொன்றை மலிந்தான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே 186
திருச்சிற்றம்பலம்

## அச்சத்தை ஒழிப்பது

திருஆவடுதுறை திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

5. நறுமா மலர்கொய்து நீரின் மூழ்கி
நாடோறும் நின்கழலே யேத்தி வாழ்த்தித்
துறவாத துன்பந் துறந்தேன் தன்னைச்
சூழுலகில் ஊழ்வினைவந் துற்றா லென்னே

உறவாகி வானவர்கள் முற்றும் வேண்ட
ஒலிதிரைநீர்க் கடல் நஞ்சுண் டுய்யக் கொண்ட
அறவா அடியேனை அஞ்சேலென்னாய்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே 187

திருச்சிற்றம்பலம்

## தீராத நோய்களைத் தீர்ப்பது

திருப்புள்ளிருக்கு வேளூர் — திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

8. பேரா யிரம்பரவி வானோ ரேத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க் கென்றும்
வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமுந் தந்திரமும் மருந்துமாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீயெழத்திண் சிலைகைக் கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே 188

திருச்சிற்றம்பலம்

## அருச்சனைப் பயனைத் தருவது

ஸ்ரீகயிலாயம் — போற்றித்திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

1. வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 189

2. பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி
பிறவி யறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்று மெய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாக மசைத்தாய் போற்றி
கயிலே மலேயானே போற்றி போற்றி 190

3. மருவார் புரமூன்று மெய்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகியென்னேப் படைத்தாய் போற்றி
யுள்ளாவி வாங்கி யொளித்தாய் போற்றி
திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி யோடும் முகிலே போற்றி
கயிலே மலேயானே போற்றி போற்றி 191

4. வானத்தார் போற்றும் மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கு முடலே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்குத் தேவனுய் நின்றாய் போற்றி
கானத்தீ யாட லுகந்தாய் போற்றி
கயிலே மலேயானே போற்றி போற்றி 192

5. ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி யெங்கும் பரந்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவியான நிழலே போற்றி
நேர்வா ரொருவரையுமில்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலே மலேயானே போற்றி போற்றி 193

6. சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி யுலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 194

7. பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்துஞ்சொல் லானாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனுந்தீ யானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 195

8. இமையா துயிரா யிருந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாக மாகத் தணைத்தாய் போற்றி
ஊழியே ழான வொருவா போற்றி
அமையா வருநஞ்ச மார்ந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
சுமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 196

9. மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர்தொழுந் தேவே போற்றி
சென்றேறியெங்கும் பரந்தாய் போற்றி
ஆவா அடியேனுக் கெல்லாம் போற்றி
யல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 197

10. நெடிய விசும்பொடு கண்ணே போற்றி
நீள அகல முடையாய் போற்றி
அடியும் முடியு மிகலிப் போற்றி
யங்கொன் றறியாமை நின்றாய் போற்றி
கொடியவன் கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 198

11. உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி
ஓதாதே வேத முணர்ந்தாய் போற்றி
எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி
பண்ணா ரிசையின்சொற் கேட்டாய் போற்றி
பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 199

திருச்சிற்றம்பலம்

## துன்பத்தை நீக்கி இன்பத்தைத் தருவது

பொது மறுமாற்றத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

1. நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரன் நற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே 200

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரம்

# ஏழாம் திருமுறை

## குருவருளைக் கொடுப்பது

திருவெண்ணெய் நல்லூர் பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

1. பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அந்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே 201

2. நாயேன்பல நாளுநினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகாவருள் பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆயாவுனக் காளாயினி யல்லேனென லாமே 202

3. மன்னேமற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னைப்
பொன்னேமணி தானேவயி ரம்மேபொரு துந்தி
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அன்னேயுனக் காளாயினி யல்லேனென லாமே 203

4. முடியேனினிப் பிறவேன்பெறின் மூவென்பெற்ற மூர்த்தீ
கொடியேன்பல பொய்யேயுரைப் பேனைக்குறிக் கொள்நீ
செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையுள்
அடிகேளுனக் காளாயினி யல்லேனென லாமே 204

5. பாதம்பணி வார்கள்பெறு பண்டம்மது பணியாய்
ஆதன்பொரு ளானேனறி வில்லேனரு ளாளா
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையுள்
ஆதீயுனக் காளாயினி யல்லேனன லாமே 205

6. தண்ணார்மதி சூடீதழல் போலுந்திரு மேனீ
எண்ணார்புர மூன்றுமெரி யுண்ண நகை செய்தாய்
மண்ணார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையுள்
அண்ணாவுனக் களாயினி யல்லேனென லாமே 206

7. ஊனுயுயி ராளுயுட லானாயுல காளுய்
வாளுய்நில ஞுளுய்கட லாளுய்மலே யாளுய்
தேளுர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையுள்
ஆளுயுனக் காளாயினி யல்லேனென லாமே 207

8. ஏற்றார்புர மூன்றுமெரி யுண்ணச்சிலே தொட்டாய்
தேற்றாதன சொல்லித்திரி வேளுேசெக்கர் வானீர்
ஏற்றாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையுள்
ஆற்றாவுனக் காளாயினி யல்லேனென லாமே 208

9. மழுவாள்வல னேந்தீமறை யோதீமங்கை பங்கா
தொழுவாரவர் துயராயின தீர்த்தலுன தொழிலே
செழுவார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அழகாவுனக் காளாயினி யல்லேனென லாமே 209

10. காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையால்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையுள்
ஆரூரனெம் பெருமாற்காளல்லேனென லாமே 210

திருச்சிற்றம்பலம்

## தவநெறியைத் தருவது

திருத்துறையூர் பண்: தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

6. மட்டார் மலர்க்கொன்றையும் வன்னியுஞ் சாடி
மொட்டாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
கொட்டாட்டொடு பாட்டொலி யோவாத் துறையூர்ச்
சிட்டா வுனவேண்டிக் கொள்வேன் தவநெறியே 211

திருச்சிற்றம்பலம்

## வினைநீக்கம் செய்வது

திருக்கழிப்பாலை பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

2. எங்கே னுமிருந்துன் னடியேனுனை நினைந்தால்
அங்கே வந்தென்னோடு முடனாகி நின்றருளி
இங்கே யென்வினையை யறுத்திட் டெனையாளுங்
கங்கா நாயகனே கழிப்பாலை மேயானே 212

திருச்சிற்றம்பலம்

## இறைவனைத் துணையாக்குவது

திருக்கடவூர் பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

6. மண்ணீர் தீவெளிகால் வருபூதங்க ளாகிமற்றும்
பெண்ணோ டாணலியாய்ப் பிறவாவுரு வானவனே
கண்ணா ருண்மணியே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அண்ணா என்னமுதே யெனக்கார்துணை நீயலதே 213

திருச்சிற்றம்பலம்

## பசியையும் பிணியையும் களைவது

திருக்குருகாவூர் பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

3. பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனாக வுண்பலிக் குழல்வானே
காடுநல் லிடமாகக் கடுவிருள் நடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே 214

திருச்சிற்றம்பலம்

## இம்மை மறுமை நலங்களை வழங்குவது

திருப்புகலூர் பண்: கொல்லி

திருச்சிற்றம்பலம்

1. தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினுஞ்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடா தேயெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மை யேதருஞ் சோறுங் கூறையு
மேத்த லாமிடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோக மாள்வதற்
கியாது மையுற வில்லையே 215

திருச்சிற்றம்பலம்

## கவலையைக் களைவது

திருக்கச்சூர் ஆலக்கோயில் பண்: கொல்லிக் கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

5. மேலைவிதியே வினையின் பயனே விரவார்புரமூன்
றெரிசெய்தாய்
காலையெழுந்து தொழுவார் தங்கள் கவலைகளைவாய்
கறைக்கண்டா
மாலைமதியே மலைமேல் மருந்தே மறவேனடியேன்
வயல்சூழ்ந்த
ஆலைக்கழனிப் பழனக்கச்சூ ராலக்கோயி லம்மானே 216

திருச்சிற்றம்பலம்

## இம்மை நலங்கள் எல்லாவற்றையும் வழங்குவது

திருநாகைக் காரோணம் பண்: கொல்லிக் கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

1. பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர்

செத்தார்தம் எலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீ ரெனக்கொருநா ளிரங்கீர்
முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறும்
கத்தூரி கமழ்சாந்தும் பணித்தருள வேண்டுங்
கடல் நாகைக் காரோண மேவியிருந் தீரே 217

2. வேம்பினொடு தீங்கரும்பு விரவியெனைத் தீர்த்தீர்
விருந்தினு னுமைவேண்டத் துருத்திபுக்கங் கிருந்தீர்
பாம்பினொடு படர்சடைக ளவைகாட்டி வெருட்டிப்
பகட்டநா னொட்டுவனோ பலகாலு முழன்றேன்
சேம்பினொடு செங்கழுநீர் தண்கிடங்கில் நிகழுந்
திருவாரூர் புக்கிருந்த தீவண்ணர் நீரே
காம்பினொடு நேத்திரங்கள் பணித்தருள வேண்டுங்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே 218

3. பூண்பதோ ரிளவாமை பொருவிடையொன் றேறிப்
பொல்லாத வேடங்கொண் டெல்லாருங் காணப்
பாண்பேசிப் படுதலையிற் பலிகொள்கை தவிரீர்
பாம்பினொடு படர்சடைமேல் மதிவைத்த பண்பீர்
வீண்பேசி மடவார்கை வெள்வளைகள் கொண்டால்
வெற்பரையன் மடப்பாவை பொறுக்குமோ சொல்லீர்
காண்பினிய மணிமாட நிறைந்தநெடு வீதிக்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே 219

4. விட்டதோர் சடைதாழ வீணவிடங் காக
வீதிவிடை யேறுவீர் வீணடிமை யுகந்தீர்
துட்டரா யினபேய்கள் சூழநட மாடிச்
சுந்தரராய்த் தூமதியஞ் சூடுவது சுவண்டே
வட்டவார் குழல் மடவார் தம்மைமயல் செய்தல்
மாதவமோ மாதிமையோ வாட்டமெலாந் தீரக்
கட்டியெமக் கீவதுதா னெப்போது சொல்வீர்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே 220

5. மிண்டாடித் திரிதந்து வெறுப்பனவே செய்து
வினைக்கேடு பலபேசி வேண்டியவா திரிவீர்
தொண்டாடித் திரிவேனைத் தொழும்புதலைக் கேற்றுஞ்
சுந்தரனே கந்தமுத லாடையா பரணம்
பண்டாரத் தேயெனக்குப் பணித்தருள வேண்டும்
பண்டுதான் பிரமாண மொன்றுண்டே நும்மைக்
கண்டார்க்குங் காண்பரிதாய்க் கனலாகி நிமிர்ந்தீர்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே 221

6. இலவவிதழ் வாயுமையோ டெருதேறிப் பூதம்
இசைபாட விடுபிச்சைக் கெச்சுச்சம் போது
பலஅகம்புக் குழிதருவீர் பட்டோடு சாந்தம்
பணித்தருளா திருக்கின்ற பரிசென்ன படிறோ
உலவுதிரைக் கடல்நஞ்சை யன்றமரர் வேண்ட
வுண்டருளிச் செய்ததுமக் கிருக்கொண்ணு திடலே
கலவமயி லிலவர்கள் நடமாடுஞ் செல்வக்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே 222

7. தூசுடைய வகலல்குல் தூமொழியா ளூடல்
தொலையாத காலத்தோர் சொற்பாடாய் வந்து
தேசுடைய இலங்கையர்கோன் வரையெடுக்க அடர்த்துத்
திப்பியகீ தம்பாடத் தேரொடுவாள் கொடுத்தீர்
நேசமுடை யடியவர்கள் வருந்தாமை யருந்த
நிறைமறையோ ருறைவீழி மிழலைதனில் நித்தல்
காசருளிச் செய்தீரின் றெனக்கருள வேண்டுங்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே 223

8. மாற்றமே லொன்றுரையீர் வாளாநீ ரிருந்தீர்
வாழ்விப்ப னெனவாண்டீர் வழியடியே னுமக்கு
ஆற்றவேற் றிருவுடையீர் நல்கூர்ந்தீ ரல்லீர்
அணியாரூர் புகப்பெய்த வருநிதிய மதனில்

தோற்றமிகு முக்கூறி லொருகூறு வேண்டுந்
தாரீரே லொருபொழுது மடியெடுக்க லொட்டேன்
காற்றனைய கடும்பரிமா ஏறுவது வேண்டுங்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே 224

9. மண்ணுலகும் விண்ணுலகும் உம்மதே யாட்சி
மலையரையன் பொற்பாவை சிறுவனையுந் தேறேன்
எண்ணிலியுண் பெருவயிறன் கணபதியொன் றறியான்
எம்பெருமா னிதுதகவோ வியம்பியருள் செய்யீர்
திண்ணெனவென் னுடல்விருத்தி தாரீரே யாகிற்
றிருமேனி வருந்தவே வளைக்கின்றே னுளைக்
கண்ணறையன் கொடும்பாட னென்றுரைக்க வேண்டா
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே 225

10. மறியேறு கரதலத்தீர் மாதிமையே லுடையீர்
மாநிதியந் தருவனென்று வல்லீரா யாண்டீர்
கிறிபேசிக் கீழ்வேளூர் புக்கிருந்தீ ரடிகேள்
கிறியும்மாற் படுவேனோ திருவாணை யுண்டேல்
பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகை மேலோர்
பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்
கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டுங்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரே 226

11. பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கு மெனக்கும்
பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன்
உண்மயத்த வுமக்கடியேன் குறைதீர்க்க வேண்டும்
ஒளிமுத்தம் பூணாரம் ஒண்பட்டும் பூவும்
கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டுங்
கடல்நாகைக் காரோண மேவியிருந் தீரென்
றண்மயத்தா லணிநாவ லாரூரன் சொன்ன
அருந் தமிழ்க ளிவைவல்லா ரமருலகாள் பவரே 227

திருச்சிற்றம்பலம்

# நமச்சிவாயத் திருப்பதிகம்

திருப்பாண்டிக்கொடுமுடி பண்: பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

1. மற்றுப்பற்றெனக் கின்றிநின்றிருப் பாதமேமனம்
பாவித்தேன்
பெற்றலும்பிறந் தேனினிப்பிற வாததன்மைவந்
தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக்
கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா
நமச்சிவாயவே 228

2. இட்டனும்மடி யேத்துவாரிகழ்ந் திட்டநாள்மறந் திட்டநாள்
கெட்டநாளிவை யென்றலாற்கரு தேன்கிளர்புனற் காவிரி
வட்டவாசிகை கொண்டடிதொழு தேத்துபாண்டிக் கொடுமுடி
நட்டவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா
நமச்சிவாயவே 229

3. ஓவுநாளுணர் வழியுநாளுயிர் போகுநாளுயர் பாடைமேல்
காவுநாளிவை யென்றலாற்கரு தேன்கிளர்புனற் காவிரிப்
பாவுதண்புனல் வந்திழிபரஞ் சோதிபாண்டிக் கொடுமுடி
நாவலாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா
நமச்சிவாயவே 230

4. எல்லையில்புக ழெம்பிரானெந்தை தம்பிரானென்பொன்
மாமணி
கல்லையுந்தி வளம்பொழிந்திழி காவிரியதன் வாய்க்கரை
நல்லவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி
வல்லவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா
நமச்சிவாயவே 231

5. அஞ்சினுர்க்கர ணுதியென்றடி யேனுநான்மிக வஞ்சினேன்
அஞ்சலென்றடித் தொண்டனேற்கரு ணல்கினுய்க்கழி
கின்றதென்
பஞ்சின்மெல்லடிப் பாவைமார் குடைந் தாடுபாண்டிக்
கொடுமுடி
நஞ்சணிகண்ட நான்மறக்கினுஞ் சொல்லுநா
நமச்சிவாயவே 232

6. ஏடுவானிளந் திங்கள்சூடினை யென்பின் கொல்புலித்
தோலின்மேல்
ஆடுபாம்பதரைக் கசைத்த அழகனேயந்தண் காவிரிப்
பாடுதண்புனல் வந்திழிபரஞ் சோதிபாண்டிக் கொடுமுடிச்
சேடனேயுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா
நமச்சிவாயவே 233

7. விரும்பி நின்மலர்ப் பாதமேநினைந் தேன்வினைகளும்
விண்டன
நெருங்கிவண்பொழில் சூழ்ந்தெழில்பெற நின்றகாவிரிக்
கோட்டிடைக்
குரும்பைமென்முலைக் கோதைமார்குடைந் தாடுபாண்டிக்
கொடுமுடி
விரும்பனேயுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா
நமச்சிவாயவே 234

8. செம்பொனேர்சடை யாய் திரிபுரந் தீயெழச்சிலை கோலினுய்
வம்புலாங்குழ லாளைப்பாக மமர்ந்துகாவிரிக் கோட்டிடைக்
கொம்பின்மேற்குயில் கூவமாமயி லாடுபாண்டிக் கொடுமுடி
நம்பனேயுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா
நமச்சிவாயவே 235

9. சாரணன்றந்தை யெம்பிரானெந்தை தம்பிரானென்பொன்
மாமணியென்று
பேரெணுயிர கோடிதேவர் பிதற்றிநின்று பிரிகிலார்
நாரணன்பிர மன்றெழுங்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடிக்
காரணுவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா
நமச்சிவாயவே 236

10. கோணியபிறை சூடியைக்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி
பேணியபெரு மானைப்பிஞ்ஞகப் பித்தனைப்
பிறப்பில்லியைப்
பாணுலாவரி வண்டறைகொன்றைத் தாரனைப்படப் பாம்பரை
நாணனைத்தொண்ட னூரன்சொல்லிவை சொல்லுவார்க்கில்லை
துன்பமே 237

திருச்சிற்றம்பலம்

## பிழைகளைப் பொறுக்கச் செய்வது

திருவொற்றியூர் பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

1. அழுக்கு மெய்கொடுன் திருவடி யடைந்தேன்
அதுவு நான்படப் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வ ரடிகேள்
பிழைப்ப னாகிலுந் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லால்
மற்று நான் அறியேன்மறு மாற்றம்
ஒழுக்க என்கணுக் கொருமருந் துரையாய்
ஒற்றி யூரெனு மூருறை வானே 238

10. ஓதம் வந்துல வுங்கரை தன்மே
லொற்றியூருறை செல்வனை நாளும்
ஞாலந் தான்பர வப்படு கின்ற
நான்மறை யங்க மோதிய நாவன்
சீலந் தான்பெரி தும்மிக வல்ல
சிறுவன் வன்றெண்ட னூர னுரைத்த
பாடல் பத்திவை வல்லவர் தாம்போய்ப்
பரகதி திண்ண நண்ணுவர் தாமே 239

திருச்சிற்றம்பலம்

## கண் ஒளியைத் தருவது

திருவேகம்பம் பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

1. ஆலந் தானுகந் தமுதுசெய் தானை
யாதி யையம ரர்தொழு தேத்துஞ்
சீலந் தான்பெரி தும்முடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாளுமை நங்கை
யென்று மேத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே 240

11. பெற்ற மேறுகந் தேறவல் லானைப்
பெரிய எம்பெரு மானென்றெப் போதுங்
கற்ற வர்பர வப்படு வானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற தென்று
கொற்ற வன்கம்பன் கூத்தனெம் மானைக்
குளிர்பொ ழிற்றிரு நாவலா ரூரன்
நற்ற மிழிவை யீரைந்தும் வல்லார்
நன்னெ றியுல கெய்துவர் தாமே 241

திருச்சிற்றம்பலம்

## துயர் களைவது

திருவடமுல்லைவாயில் பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

1. திருவுமெய்ப் பொருளுஞ் செல்வமு மெனக்குன்
சீருடைக் கழல்களென் றெண்ணி
ஒருவரை மதியா துறாமைகள் செய்து
முடியம் உறைப்பனுய்த் திரிவேன்

முருகமர் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய் வாயினு லுன்னைப்
பரவிடு மடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே 242

விரைதரு மலர்மே லயனோடு மாலும்
வெருவிட நீண்டவெம் மானைத்
திரைதரு புனல்சூழ் திருமுல்லை வாயிற்
செல்வனை நாவலா ரூரன்
உரைதரு மாலையோ ரைஞ்சினோ டைஞ்சு
முள்குளிர்ந் தேத்தவல் லார்கள்
நரைதிரை மூப்பு நடலையு மின்றி
நண்ணுவர் விண்ணவர்க் கரசே 243

திருச்சிற்றம்பலம்

## உடற் பிணியை அகற்றுவது

திருத்துருத்தியும் -திருவேள்விக்குடியும் பண்: காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

1. மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி
வெடிபடக் கரையொடுந் திரைகொணர்ந் தெற்றும்
அன்னமாங் காவிரி யகன்கரை யுறைவா
ரடியிணை தொழுதெழு மன்பரா மடியார்
சொன்னவா றறிவார் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் செடியனேன் நாயேன்
என்னைநான் மறக்குமா றெம்பெரு மானை
யென்னுடம் படும்பிணி யிடர்கெடுத் தானை 244

10. மங்கையோர் கூறுகந் தேறுகந் தேறி
மாறலார் திரிபுரம் நீறெழச் செற்ற
அங்கையான் கழலடி யன்றிமற் றறியான்
அடியவர்க் கடியவன் தொழுவனு ரூரன்

கங்கையார் காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளா ரடிகளைச் சேர்த்திய பாடல்
தங்கையால் தொழுதுதந் நாவின்மேற் கொள்வார்
தவநெறி சென்றம ருலகமாள் பவரே 245

திருச்சிற்றம்பலம்

## மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகம்

## எட்டாந் திருமுறை

## சிவசிந்தனை உறைப்பைத் தருவது

திருச்சதகம் மெய்யுணர்தல்

திருச்சிற்றம்பலம்

2. கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல் லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே இருக்கப் பெறின்இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல் லாதெங்கள் உத்தமனே 246

திருச்சிற்றம்பலம்

## பிறப்பை அறுப்பது

### அறிவுறுத்தல்

திருச்சிற்றம்பலம்

16. வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம்நின்பால்
தாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டிச்
சூழ்த்தமது காமுரலுந் தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானுமுன்னைப் பரவுவனே 247

திருச்சிற்றம்பலம்

## பிறவிக் கடலைக் கடப்பிப்பது

### சுட்டறுத்தல்

திருச்சிற்றம்பலம்

27. தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே உய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்தம் இல்லா மல்லற்
கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே 248

திருச்சிற்றம்பலம்

## நமச்சிவாயத் திருப்பாட்டு

### காருணியத்திரங்கல்

திருச்சிற்றம்பலம்

62. போற்றியோ நமச்சி வாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய புறமெனப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய சயசய போற்றி போற்றி 249

திருச்சிற்றம்பலம்

## கருணை வெள்ளத்து அழுத்துவது

திருவம்மானை ஆனந்தக்களிப்பு

திருச்சிற்றம்பலம்

5. கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை

வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலம்மன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்காண் அம்மானாய் 250

திருச்சிற்றம்பலம்

## அம்மை அப்பர் அருள் தருவது

திருக்கோத்தும்பி சிவஞானைடக்கியம்

திருச்சிற்றம்பலம்

18. தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
சூலமுந் தொக்க வளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பி 251

திருச்சிற்றம்பலம்

## அழியாத ஆனந்தத்தை வழங்குவது

கோயிற்றிருப்பதிகம் அனுபோக இலக்கணம்

திருச்சிற்றம்பலம்

10. தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யான்இதற் கிலன்ஓர்கைம் மாறே 252

திருச்சிற்றம்பலம்

## சிவபெருமானுடன் ஒன்றுபடுத்துவது

புணர்ச்சிப்பத்து அத்துவித இலக்கணம்

திருச்சிற்றம்பலம்

4. அல்லிக் கமலத் தயனும் மாலும்
அல்லா தவரும் அமரர் கோனுஞ்
சொல்லிப் பரவும் நாமத் தானைச்
சொல்லும் பொருளும் இறந்த சுடரை
நெல்லிக் கனியைத் தேனைப் பாலை
நிறையின் அமுதை அமுதின் சுவையைப்
புல்லிப் புணர்வ தென்றுகொல் லோ என்
பொல்லா மணியைப் புணர்ந்தே 253

திருச்சிற்றம்பலம்

## பரகதியைக் கொடுப்பது

அருட்பத்து மகாமாயா சுத்தி

திருச்சிற்றம்பலம்

8. முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டறா மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யுஞ்
சித்தனே செல்வத் திருப்பெருந்துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே 254

திருச்சிற்றம்பலம்

## சீவ போதத்தை ஒழிப்பது

குழைத்தபத்து ஆத்தும நிவேதனம்

திருச்சிற்றம்பலம்

6 வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட
முழுதுந் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டி
என்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயா தருள்செய்தாய் யானும்
அதுவே வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில் அதுவும்
உன்தன் விருப்பன்றே 255

திருச்சிற்றம்பலம்

## திருக்கோவையார்

## ஆனந்த வெள்ளத்தில் திளைப்பிப்பது

திருச்சிற்றம்பலம்

307. ஆனந்த வெள்ளத் தழுந்துமொ ராருயி ரீருருக்கொண்
டானந்த வெள்ளத் திடைத்திளைத் தாலொக்கு மம்பலஞ்சே
ரானந்த வெள்ளத் தறைகழ லோனருள் பெற்றவரி
ஞனந்த வெள்ளம் வற்றாது முற்றாதிவ் வணிநலமே 256

திருச்சிற்றம்பலம்

## கருவூர்த்தேவர் அருளிய திருவிசைப்பா

## ஒன்பதாம் திருமுறை

## திருவருளை எளிதில் வழங்குவது

தஞ்சை பண்: பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

8. பன்னெடும் காலம் பணிசெய்து பழையோர்
தாம்பலர் ஏம்பலித் திருக்க

என்னெடுங் கோயில் நெஞ்சுவீற் றிருந்த
எளிமையை என்றும்நான் மறக்கேன்
மின்னெடும் பருவத்து இளமயி லனையார்
விலங்கல்செய் நாடக சாலை
இன்னடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே 257

திருச்சிற்றம்பலம்

## பூந்துருத்தி நம்பிகாடநம்பி அருளியது

## சிவபெருமான் திருவுருவக் காட்சியை வழங்குவது

திருவாரூர் பண்: பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

2. பத்தியாய் உணர்வோர் அருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்காள் இவர்தந்
திருவுரு இருந்தவா பாரீர்
சத்தியாய்ச் சிவமாய் உலகெலாம் படைத்த
தனிமுழு முதலுமாய் அதற்கோர்
வித்துமாய் ஆரூர் ஆதியாய் வீதி
விடங்கராய் நடம்குலா வினரே 258

திருச்சிற்றம்பலம்

## சேந்தனார் அருளிய திருப்பல்லாண்டு

## ஒன்பதாம் திருமுறை

## அருள் அமுதத்தை அளிப்பது

பண்: பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

8. சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங்
கொங்கையிற் செங்குங்குமம்

போலும் பொடியணி மார்பிலங் குமென்று
புண்ணியர் போற்றிசைப்ப
மாலும் அயனும் அறியா நெறிதந்து
வந்தென் மனத்தகத்தே
பாலும் அமுதமும் ஒத்து நின்றானுக்கே
பல்லாண்டு கூறுதுமே 259

திருச்சிற்றம்பலம்

## திருமூலநாயனார் அருளிய திருமந்திரம்

## பத்தாம் திருமுறை

## சிவபெருமானது உயர்வை உறைப்பிப்பது

திருச்சிற்றம்பலம்

5 சிவனொடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை
அவனொடொப் பார்இங்கு யாவரும் இல்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்
தவனச் சடைமுடித் தாமரை யானே 260

திருச்சிற்றம்பலம்

## சிவநாமச் சிறப்பை உறைப்பிப்பது

திருச்சிற்றம்பலம்

2716. சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளுஞ்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே 261

திருச்சிற்றம்பலம்

## பட்டணத்துப் பிள்ளையார் அருளிய

## திருக்கழுமல மும்மணிக்கோவை – பதினொராந்திருமுறை
## சிவபூசைச் சிறப்பை உறைப்பிப்பது

திருச்சிற்றம்பலம்

12. போதும் பெறாவிடிற் பச்சிலை யுண்டு புனலுண்டெங்கும்
ஏதும் பெறாவிடில் நெஞ்சுண்டன் றேயிணை யாகச்செப்புஞ்
சூதும் பெறாமுலைப் பங்கர்தென் தோணிபு ரேசர்வண்டின்
தாதும் பெறாத அடித்தா மரைசென்று சார்வதற்கே 262

திருச்சிற்றம்பலம்

## நம்பியாண்டார் நம்பி அருளிய

## ஆளுடை பிள்ளையார் திருமும்மணிக்கோவை
## பிறவிக் கடலைக் கடப்பிப்பது

திருச்சிற்றம்பலம்

11. பிறவிஎனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனுந் தோற்றோணி கண்டீர் -நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ் 263

திருச்சிற்றம்பலம்

## சேக்கிழார் பெருமான் அருளிய திருத்தொண்டர் புராணம்

## பன்னிரண்டாந் திருமுறை
## நல்வாழ்வை நல்குவது

திருச்சிற்றம்பலம்

1. உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்

அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம் 264
திருச்சிற்றம்பலம்

## அருட் காட்சியை வழங்குவது

திருச்சிற்றம்பலம்
131. சடைமருங்கில் இளம்பிறையுந் தனிவிழிக்குந் திருநுதலும்
இடமருங்கில் உமையாளும் எம்மருங்கும் பூதகணம்
புடைநெருங்கும் பெருமையுமுன் கண்டரசன் போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல்வேந்தற்
கருள்கொடுத்தான் 265
திருச்சிற்றம்பலம்

## மாறில்லாத மகிழ்ச்சியைத் தருவது

திருச்சிற்றம்பலம்
252. ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடுமா னந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார் 266
திருச்சிற்றம்பலம்

## இடப வாகனக் காட்சியை அளிப்பது

திருச்சிற்றம்பலம்
968. ஆனயர் குழலோசை கேட்டருளி அருட்கருணை
தானய திருவுள்ளம் உடையதவ வல்லியுடன்

காஞதி காரணராம் கண்ணுதலார் விடையுகைத்து
வாஞறு வந்தணைந்தார் மதிநாறுஞ் சடைதாழ 267

திருச்சிற்றம்பலம்

## அருச்சனை விருப்பத்தை அளிப்பது

திருச்சிற்றம்பலம்

1133 எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை எனவுரைத் தருள
அண்ண லார்தமை அர்ச்சனை புரியஆ தரித்தாள்
பெண்ணின் நல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து 268

திருச்சிற்றம்பலம்

## சிவ பூசையை நிறைவிப்பது

திருச்சிற்றம்பலம்

1143 கரம்த ரும்பயன் இதுவென உணர்ந்து
கம்ப மேவிய உம்பர்நா யகர்பால்
நிரந்த காதல்செய் உள்ளத்த ளாகி
நீடு நன்மைகள் யாவையும் பெருக
வரந்த ரும்பொரு ளாம்மலை வல்லி
மாறி லாவகை மலர்ந்தபே ரன்பால்
சிரம்ப ணிந்தெழு பூசைநாள் தோறும்
திருவுளங்கொளப் பெருகிய தன்றே 269

திருச்சிற்றம்பலம்

## திருவடி தீட்சையை அருள்வது

திருச்சிற்றம்பலம்

1465 நன்மைபெரு கருள்நெறியே வந்தணைந்து நல்லூரில்
மன்னுதிருத் தொண்டஞர் வணங்கிமகிழ்ந்
தெழும்பொழுதில்

" உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்"

என்றவர்தஞ்

சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான் 270

திருச்சிற்றம்பலம்

## கயிலைக் காட்சியை நல்குவது

திருச்சிற்றம்பலம்

1649 வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனஇடப் பாகம்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனார் 271

திருச்சிற்றம்பலம்

## உண்மை ஞானத்தை உதவுவது

திருச்சிற்றம்பலம்

1973 சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில் 272

திருச்சிற்றம்பலம்

## குறைவில்லாத செல்வத்தைத் தருவது

திருச்சிற்றம்பலம்

2329 நச்சி இன்தமிழ் பாடிய ஞானசம் பந்தர்
இச்சை யேபுரிந் தருளிய இறைவரின் அருளால்
அச்சி றப்பருள் பூதமுன் விரைந்தகல் பீடத்
துச்சி வைத்தது பசும்பொன்ஆ யிரக்கிழி ஒன்று 273

திருச்சிற்றம்பலம்

## எமவேதனையை ஒழிப்பது

திருச்சிற்றம்பலம்

2643 "ஆலமே அமுத மாக உண்டுவா னவர்க்க ளித்துக்
காலனை மார்க்கண் டற்காக் காய்ந்தனை அடியேற் கின்று
ஞாலம்நின் புகழே யாக வேண்டும்நான் மறைகள் ஏத்தும்
சீலமே ஆல வாயிற் சிவபெரு மானே" என்றார் 274

திருச்சிற்றம்பலம்

## துன்பத்தை நீக்கி இன்பத்தை வழங்குவது

திருச்சிற்றம்பலம்

2763 மறையவர் வேள்வி செய்ய வானவர் மாரி நல்க
இறைவன்நன் னெறியின் ஓங்க இகத்தினில்
அவனி இன்பம்
குறைவில தெனினுங் கூற்றை உதைத்தவர் நாமங்கூறி
நிறைகடற் பிறவித் துன்பம் நீங்கிடப் பெற்ற தன்றே 275

திருச்சிற்றம்பலம்

## அகப்பூசைப் பயனைத் தருவது

திருச்சிற்றம்பலம்

4091 மறவாமை யாலமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
உறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
இறவாத ஆனந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
அறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச்
சனை செய்வார் 276

திருச்சிற்றம்பலம்

## நிலைத்த இன்பத்தை வழங்குவது

திருச்சிற்றம்பலம்

4286 என்று மின்பம் பெருகு மியல்பினுல்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம் 277

திருச்சிற்றம்பலம்

## மாகேசுவர பூசைத் திருமுறை

திருச்சிற்றம்பலம்

1 அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே

2 கொண்டு வந்து மனைப்புகுந்து குலாவுபாதம் விளக்கியே
மண்டுகாதலின் ஆசனத்திடை வைத்தருச்சனை செய்தபின்
உண்டிநாலு விதத்திலாறு சுவைத்திறத்தினில் ஒப்பிலா
அண்டர் நாயகர் தொண்டரிச்சையில் அமுதுசெய்ய அளித்துளார்

3 அல்லார் கண்டத் தண்டர்பிரான் அருளால் பெற்ற படிக்காசு
பல்லா றியன்ற வளம்பெருகப் பரமன் அடியா ராஞர்கள்
எல்லாம் எய்தி உண்கவென இரண்டு பொழுதும் பறைநிகழ்த்திச்
சொல்லால் சாற்றிச் சோறிட்டார் துயர்கூர் வறுமை தொலைத்திட்டார்

4 பண்பின் மிக்கார் பலராய் அணையினும்
உண்ப வேண்டி ஒருவர் அணையினும்
எண்பெ ருக்கிய அன்பால் எதிர்கொண்டு
நண்பு கூர்ந்தமு தூட்டும் நலத்திஞர்

5 தொண்டர் பலரும் வந்தீண்டி உண்ணத் தொலையா அமுதூட்டிக்
கொண்டு செல்ல வருநிதியம் முகந்து கொடுத்துக் குறைந்தடைவார்
வண்டு மருவுங் குழலுமையாள் கேள்வன் செய்ய தாளென்னும்
புண்டரீகம் அகமலரில் வைத்துப் போற்றும் பொற்பினூர்

6 காதலொடுத் தொழுதெடுத்துக் கொண்டுநின்று கைகுவித்துப்
பெருமகிழ்ச்சி கலந்து பொங்க
நாதர்விரும் படியார்கள் நாளும் நாளும்
நல்விருந்தாய் உண்பதற்கு வருக என்று
தீதில்பறை நிகழ்வித்துச் சென்ற தொண்டர்
திருவமுத கறிநெய்பால் தயிரென் றின்ன
ஏதமுறா தினிதுண்ண ஊட்டி அங்கண்
இருதிறத்துப் பெருந்தவரும் இருந்த நாளில்

7 மண்ணணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லார்அடி யார்தமை அமுதுசெய் வித்தல்
கண்ணணி னுல்அவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாதெனில் உலகர்முன் வருகென உரைப்பார்

8 தூயதிரு அமுதுகனி கன்னல்அறு சுவைக்கறிநெய்
பாயதயிர் பால்இனிய பண்ணியம்உண் நீர்அமுதம்
மேயபடி யால்அமுது செய்விக்க மிசைந்தடியார்
மாயிருஞா லம்போற்ற வருமிவர்பால் மனமகிழ்ந்தார்

9 தனிவெள் விடைமேல் நெடுவிசும்பில் தலைவர் பூத கணநாதர்
முனிவர் அமரர் விஞ்சையர்கள் முதலா யுள்ளோர் போற்றிசைப்ப
இனிய கறியும் திருவமுதும் அமைத்தார் காண எழுந்தருளிப்
பனிவெண் திங்கள் முடிதுளங்கப் பரந்த கருணை நோக்களித்தார்

10 ஆறணிந்த சடைமுடியார்க் காதிரைநாள் தொறுமென்றும்
வேறுநிறை வழிபாடு விளங்கியபூ சனைமேவி
நீறணியுந் தொண்டரணைந் தார்க்கெல்லாம் நிகழ்பசும்பொன்
நூறுகுறை யாமலளித் தின்னமுது நுகர்விப்பார்

திருச்சிற்றம்பலம்

